ஓம் சுத்தசக்தி.

# புதுயுகப் பாட்டு.

(ஸ்வராவளியுடன்)



ஆன்ம விரிவில் அகண்டநல் வாழ்வில்
வானர சிலங்க மலர்ந்தது புதுயுகம்!

சுத்தானந்தபாரதி.

பாரதசக்தி நிலயம்,
புதுவை.

தமிழன்பருக்கு !

தமிழ் செம்பொருட் கவிக்களஞ்சியம்; கலைக்கடல். அக்கடலில் பொன்னும் பசுமையுந் துலங்கும் புதுயுகத் தீவொன்று அகண்டமாக எழுந்து இன்று கவிக்கனவில் விளங்குகின்றது. அத்தீவில் அழகும், அன்பும், அருளும், உண்மையும், சுத்தமும், சுதந்திரமும், ஸமத்வமும், பேரின்பமும், ஆத்மசக்தியும் ரஸலீலை புரிகின்றன. அவற்றின் அலைமோதும் இசைத்திரளின் இன்பச் சிலிர்ப்பே இப்புதுயுகப் பாட்டெனக் கொள்க. ஜீவ முரளியில் கண்ணன் ஆத்மசக்தி யிசை யூதுகிறான். அவ்விசையின் எதிரொலி உள்ளத்தில் புதுயுகத்தைத் தோற்றுகிறது அப்புதுயுகத்தின் காட்சியைத் துலக்கும் இப்பாமலர் என்றும் புத்திள நகை வீசியெழிலும் தமிழரசிக்கும் அவளது செல்வப் புதல்வருக்கும் அன்புக் காணிக்கையாகுக.

சுத்தானந்தபாரதி.

புதுயுகப்பாட்டு முதல்பாகம் ஆத்மசக்தி ஸாதனம்

இரண்டாம்பாகம் — தர்மஸாதனம்

மூன்றாவது பாகம் — ஸங்கஸாதனம்

ஓம் சுத்தசக்தி.

# புதுயுகப் பாட்டு.

(ஸ்வராவளியுடன்)



ஆன்ம விரிவில் அகண்டசக்தி வாழ்வில்
ஞானச் செங்கதிர் மலர்ந்தது புதியுகம்!

சுத்தானந்தபாரதி.



பாரதசக்தி நிலையம்
புதுவை.

(உரிமை பதிப்பகத்தது) (விலை அணா 6.

1932.

ஓம் சுத்தசக்தி.

# புதுயுகப் பாட்டு.

(சுத்தானந்த பாரதியார்.)

## ஸ்வராவளி.

ஆத்மசக்தி ஸாதகர்கள், சுத்த பக்தி பரவசமுடன் சேர்ந்து பாடவும், பிடில், ஹார்மோனியம், வீணை, கோட்டு முதலிய வாத்தியங்களில் வாசிக்கவும் ஏற்றபடி புதுயுகப் பாட்டுகளுக்கு **ஸ்வராவளி** சேர்க்கப்பட்டுள்ளது. இந்த ஸ்வரஸாஹித்யம் செய்தவர் ஸ்ரீவைகுண்டம் அன்பர் **வி. எஸ். பார்த்தஸாரதி அய்யங்கார்** ஆவர். இவர் காலஞ்சென்ற மஹா வித்வான் பெருங்குளம் **ஸ்ரீநிவாசய்யங்காரின்** செல்வரும் மாணவருமாவர். அன்னார் நடத்திய **கானவித்யாப்ரகாசினி** என்னும் அருங்கலைப் பத்திரிக்கையை ஸ்ரீமான் அனந்தகிருஷ்ணய்யங்காரை (B. A.) ஆசிரியராகக் கொண்டு நடத்திவருகிறார். ஸங்கீதத்தில் நல்ல தேர்ச்சியுள்ளவர். மஹா நாடக வீணையிலும், ஹார்மோனியத்திலும் மிக்க அனுபோகமுள்ளவர். ஸங்கீதக் கலையைத்தமிழகத்திற் பரப்ப மிகவும் உற்சாகமுள்ளவர். இப்புதுயுகப் பாடல்களை வாத்யங்களுடன் கேட்க விரும்பும் ரஸிகர்கள் இவர் உதவியை எப்போதும் பெறலாம்.

பாரதசக்தி நிலையம்,

புதுவை.

# THE NEW-ERA SONGS.

## THE MASTER-POET'S MESSAGE.

The pouring of a new and greater self-vision of man and Nature and existence into the idea and the life is the condition of the completeness of the coming poetry. A large setting and movement of life opening a considerable expansion to the human soul and mind has been in the great ages of literature the supreme creative stimulus. But it is a much larger cosmic vision, a realising of godhead in the world and in man, of his divine possibilities as well as of the greatness of the power that manifests in what he is, a spiritualised uplifting of his thought and feeling and sense and action, a more developed psychic mind and heart, a truer and deeper insight into his nature and the meaning of the world, a calling of diviner potentialities and more spiritual values into the intention and structure of his life that is the call upon humanity, the prospect offered to it by the slowly unfolding and now more clearly disclosed Self of the universe. The nations that most include and make real these things in their life and culture are

the nations of the coming dawn and the poets of whatever tongue and race who most completely see with this vision and speak with the inspiration of its utterance are those who shall be the creators of the poetry of the future.

Victory day<br>24—11—32. **Sri Aurobindo.**

## THE GOLDEN AGE.

---

The old shall perish; it shall pass away,
Expunged, annihilated, blotted out;
And all the iron bands that ring about
Man's wide expansion shall at last give way.

Freedom, God, Immortality; the three
Are one and shall be realised at length,
Love, Wisdom, Justice, Joy, and utter Strength
Gather into a pure felicity.

It comes at last, the day, foreseen of old,
what John in Patmos saw, what Shelley dreamed,
Vision and vain imagination deemed,
The City of Delight, the Age of Gold.

*Sri Aurobindo.*

# புதுயுகப் பாட்டு.

## பொருளடக்கம்.



ஓம் சுத்த சக்தி.

# புது யுகப் பாட்டு.

## † புது யுகம்.

"யோக சக்தி வாழ்வு"—இதுவே புதுயுகக் கோட்பாடு. அழகு, ஆற்றல், அமைதி, இன்பம், விடுதலை, ஒற்றுமை எல்லாம் "சக்தி"யில் அடங்கும். அந்த சக்தி உலகையாளும் பரமாத்ம சக்தி, சிற்சக்தி. அது ஒவ்வொருவருள்ளத்துங் கனலிடுகிறது. ஆனால் அக் கனலை மனமாசு மறைத்துக்கொண்டிருக்கிறது. மனம் அகந்தை வடிவு. நானெனும் இவ்வகந்தையே உலகிலுள்ள துயர், வேறுபாடுகளுக்கு மூலை. || இவ்வகந்தை ராஜஸ பலத்துடன் கூடி அஸுரத் தன்மையுடன், வாழ்வைக் கொடுங்கோல் புரிந்து இன்பத்தைச் சிதைக்கிறது. இதையொழித்து மனமா சகன்றால் நம்முள் தெய்வசக்தி, ஆத்ம

---

† ஸ்ரீ அரவிந்தப்ராகாசத்தின் தொடர்பாக இந்நூலைப்படிக்கவும்.
|| இதன் விரிவு கீதைகாட்டும் பாதையிற் காண்க.

சக்தி பளிச்சிட்டெழுந்து வெகு சுகமாகச் சுழலும். இந்த சக்திபெற்று, இதனுணர்வில் வாழ்வதே யோக வாழ்வு. அத்தகைய யோகவாழ்வை உலகெலாம் ஒரு சங்கமாகக் கூடி வாழலாம். அப்படி வாழ்வே யோகமாகும்போது, ஸத்ய யுகம், புது யுகம், மலரும். அதற்கு முதலில் வேண்டுவது * சக்தி ஸாதனம். உறுதி, அன்பு, அடைக்கலம், தூய்மை, ஆர்வம், உள்ளுறவு இவற்றால் சக்தி யுணர்வாகும். அந்த சுத்த சக்தி எல்லாம் வல்லது. அந்த சக்தி மனிதனை அமரனுக்கும்; வாழ்வில் அமுதம் பொழியும். சுத்த, ஸ்வதந்த்ர, ஸமத்வ ஸத்ய ஜோதியில் வாழ்வை யமைக்கும். ஆணவஞ் சிதைத்து, எனது யான் என்பதற்று, உலகக் கோயிலில் எல்லாரும் ஒருகுல தெய்வசக்தி மைந்தராக, கடவுளறிவில், கடவுட் பணிக்காகக் கடவுளுறவில் வாழுவதே புதுயுகப் பெருமை. இத்தகைய தெய்வ சங்க வாழ்வில் ஆன்ம வொற்றுமையும், அகண்ட ஸமரஸமும், கடவுளறிவும், இன்பமும், உண்மையும், பூரணமும் இயல்பாக விளங்கும். அதில் வேற்றுமை, போட்டி, பொறாமை, சிறுமை, கொடுமைகளிரா. உலகச் செல்வமும், வளமும், ஒரு தனிமனிதனின் அகந்தைக் குட்படாது, தெய்வப் பொதுமையில், அவரவர் தேவைக்

* சக்தி ஸாதனமுறை "அன்னை"யில் விரிவாக்கப்பட்டுள்ளது.

கேற்றபடி முரணின்றி யனுபவிக்க இயலும். செய்வ தெல்லாம் தெய்வப் பணியாகும். அறிவு, கல்வி, கலை, நீதி, உண்மை, ஆற்றல், அழகு, வளமை, செல்வம் எல்லாம் கடவுளுணர்வில் இன்பக்கனி பழுக்கும். மனி தன், விஞ்ஞான சித்திபெற்று, மனிதக் கடவுளாக, சுத்த சுதந்திர, ஸமத்வ நித்தியவாழ்வில் இலங்குவான். பெண்மை சுதந்திரப் புன்னகையுடன் சக்திக் கனலாக விளங்கும். ஆற்றலும், அழகும், அன்பும் இன்பமும், பாட்டும் பண்ணும், பூவும் பொலிவும் போன்று ஆண்மையும் பெண்மையும் ஆன்மவுறவில் காதலும் கற்பும், போக மும் யோகமும் நிலவும். சாதிமதக் கோட்பாடுகளுக்கும், எத்தகைய சட்டங்களுக்குந் தேவையின்றி, ஆன்ம வுண்மையினின்றே வாழ்வு விரிந்து இன்பமாகப்பெருகும். மனித ஜாதியை மனங்கடந்த விஞ்ஞானத்திற்கு உயர்த்தி, அமரானந்தராக மாற்றி, உலகனைத்தையும் சச்சிதானந்த மயமான தெய்வசங்கமாக்குவதே புதுயுக முயற்சி. உள் ளமைதி, உள்ளின்பம், உள்ளொற்றுமை, உட்சுத்தம் இவையே உலக வாழ்விலும் விரியும். இவற்றையளிப்பது சக்தி-ஆத்மசக்தி, யோகசக்தி. தூயவுள்ளன்பர், உள் ளுறவுடன் அந்த சக்தியை ஆர்வமுடன் கூவியழைத்து, மனிதரைக் கொடுமைசெய்யும் அகந்தை யரக்க வலியை, மனவிருளைப் போக்கி, சுத்தசுதந்திர ஸமத்வானந்தமளிக்க,

ஒன்றுகூடி, பக்தி பரவசமுடன் பாடித் தம்முள் விளங்கும் ஆன்மக் கனலை எழுப்புவதே இப் பாட்டுகளின் கருத்தும், பயனுமாகும். இதன் உண்மைகள் அநுபவங் கண்டே பாடப்பெற்றனவாதலின், ஒவ்வொன்றிலும், உறுதிபூண்டு, தமது வாழ்விலும், உலக வாழ்விலும் ஜோதி சக்தியானந்த வெள்ளம்பாய தெய்வசக்தியை அன்பர் கூவுக! திண்ணிய எண்ணம் உண்மையாய்ப் பலிக்கும். மஹாசக்தி உலகின் மனவிருளையொழித்து விஞ்ஞான வொளியேற்றி, அமரவாழ்வு தருக என்று ஒவ்வோருள்ளத்தும் விருப்பக்கனலெழுக!

இப்பாட்டுகள் ஸ்ரீ அரவிந்தரின் பார்வையும், ஆசியும் பெற்றவை. யோகசக்தி தூண்டி, தெய்வப் பணியுமளித் தாண்ட குருநாதனுக்கே இப் பாமாலையைச் சூட்டுகேன்.

சுத்தானந்த பாரதி.

---

குறிப்பு:—இப் பாட்டுகளின் ராகம், தாளம், ஸ்வராவளிகள் பின்னால் வரிசைப்படி சேர்க்கப்பட்டுள்ளன. பல்லவிகள் * குறியிடப்பட்டுள்ளன.

ஓம் சுத்த சக்தி.

# புது யுகப் பாட்டு.

## பொலிக!

பூரணம் பொலிக! பொன்யுகம் மலர்க! யோகசக்தி
வீரமே யெழில்க! வொற்றுமை வளர்க! வெற்றிவாழ்வில்
ஆரமு தெழுக! நாரணர் மகிழ்க! அன்னையருள்
மாரியே பொழிக! வான்புவி செழித்து வாழியவே!

---

## க. காலைப் பாட்டு.

* விண்மகள் வந்தனள்—விடிந்தது காலை
வீழ்ந்த திருட்குலம்—வாழ்ந்தது ஞாலம்!
பொன்னிளம் புன்னகை பூத்தது வானில்—
போற்றி பராசக்தி வருகவே!
பூமக ளின்பம் பெருகவே!

மதுமலர் வண்டினம் புதுயுகக் குயில்கள்
மாதவன் பூங்குழல்— வாணியின் வீணை

சுதியொடுந் தொண்டர் துதிகள் முழங்கிட
சுத்த சுதந்தரி வருகின்றாள்!
சுந்தர வாழ்வு தருகின்றாள்!

எழுந்தது சத்திய ஜோதி யிரவி
யெங்கிலும் பூரண னந்தம் பரவி
மலர்ந்த தரவிந்தம்—மணந்தது வசந்தம்
மங்களக் கோயிலிற் கூடுவோம்!
மஹாசக்தி யாடல்கொண் டாடுவோம்!

மாநிலச் செல்விக்கு ஞானப்பா லூட்டி
வானக மடியினில் வைத்துச் சீராட்டித்
தேன்மொழி கொஞ்சித் திருவணி செய்கின்றாள்—
தேவி யருட்கரஞ் சேருவோம்!
தெய்வப் புதல்வராய் வாழுவோம்!

ஓம்சக்தி யோம்சக்தி யோமெனச் சான்றோர்
யோகமும் போகமும் மேவிநிற் கின்றார்;
நாம்செய்த செழுந்தவந் தேன்கனி பழுத்தது—
நம்மைப்பே ரின்பத்தால் வெல்லுவோம்!
நல்லன யாவினும் பல்குவோம்!

---

## உ. ஆனந்தக்களிப்பு.

* சச்சிதா னந்தவை போகம்—இந்தத்
தாரணி வாழ்வு பராசக்தி யோகம்
அச்ச மிருளக மோகம்—பல
வாகிய யாவும் பிரமத்தில் ஏகம்.

யானெனும் ஆணவம் போக்கி—யெல்லாம்
அஞ்சலி தந்தருள் அப்பன தாக்கி,
ஈனக் கவலையை நீக்கி—யவ
னிச்சை நடப்ப திருந்துள்ளே நோக்கின்(சச்சி)

சாதி சமய வழக்கு—மனச்
சந்தையின் மாயச் சழக்கறப் பார்க்கின்,
சோதி விக்ஞான விளக்கு—அதில்
சுத்த ஸ்வதந்த்ர ஸமத்வ முழக்கம்.

தெள்ளத் தெரிந்திடும் ஒன்று—உள்ளே
சிந்தித்துத் தேடிச் சிதைவற நின்றால்,
உள்ள நிலையதைப் பெற்றே—வளர்
யோகத்தி னாலுல கொற்றுமை முற்றும்.

ஆன்ம விரிவெங்குந் தோன்றும்—மெய்
யன்பறி வின்ப மமைதியி லூன்றும்.
மானிடந் தெய்வந் துலங்கும்—பாரில்
மங்கள வானர சாட்சி யிலங்கும்.

---

## ௩. புதுயுக முரசு.

* வெற்றி முரசடிப்போம்—புதுயுக
வீர முரசடிப்போம்!
ஒற்றுமைச் சங்கொலிப்போம்—அத்யாத்ம
வுண்மைக் கொடிபிடிப்போம்!

கூற்றை யுதைத்த சிவன்—மலரடி
கொஞ்சிப் பணிந்திடுவோம்—மன
வேற்றுமைக் கட்டொழிப்போம்—கண்ணன்குழல்
வேகப்படி நடிப்போம்!

குவலய மெல்லாம்—பராசக்தி
கோயி லென் றேயறிவோம்—ஈசன்
எவ ரிதயத்தி லும்—அவனருள்
இச்சை யொன்றே புரிவோம்!

சூது பொறுமைகளை—யறிவாற்
சுட்டுப் பொசுக்கிடுவோம்—வஞ்ச
வேதனையை நகைப்போம்—விடுதலை
மேவி யுளங்களிப்போம்!

தன்னலக் கோட்டைகளை—யடிமைச்
சங்கடப் பூட்டுகளை—யான்ம
வன்மையி னுலுடைப்போம்—தவக்கனல்
மல்கித் துயரொழிப்போம்.

எங்கள் குலசக்தி—யருளால்
எடுத்தது சித்தி!—தெய்வ
சங்கப் பசுவளத்தில்—அமுதம்
சந்ததமும் பொழியும்!



## ச. சத்ய யுகக் கொடி.

* வாழ்க ஜயக்கொடி—ஸத்ய யுகக்கொடி
சக்தி மணிக் கொடியே
வாழ்வோமிவ் வையக மானிடத் தேவர்
மகிழ்ந்திதன் பொன்னடியே!

உள்ளங் கிளர்ந்தின்ப—வெள்ளம் பெருகிட
வொற்றுமை யாய்ப் பணிவோம்!
அல்லும் பகலு மருட்பணி செய்திதன்
அன்பை யுளத் தணிவோம்!

கண்ணிமை போலிதைக் கால முள்ளமட்டுங்
காவல் புரிந்திடுவோம்!
வன்மையும் வீர வளமையுங் கொண்டொளிர்
வாகை புனைந்திடுவோம்!

எந்த மதத்தினர் எந்த வகுப்பினர்
எங்கெந்த நாட்டினரும்,
வந்தித னின்பச் சுதந்திர வீட்டில்
வளர்பவர் ஓர் நிகரே!

கடலும் மலையுங் கதிரும் விளங்குங்
கமலத் திருக் கொடியே
இடியும் புயலு மிகலு மெதிர்ப்பு
மிணங்கு மிதனடியே!

கண்ணிலக் கோயிற் றுவசத்தை யுன்னதக்
கௌரியி லூன்றிடு வோம்!
கண்ணன் முக்கண்ணன் ஓம்காளி மஹாசக்தி
காத்திட வாழ்த்திடு வோம்.



## ரு. புது யுகக் கும்மி.

* ஆற்றல் பிறந்தது! வாட்ட மொழிந்துநல்
லாரமு தாவியில் ஊறுதடீ!
போற்றி யரவிந்தன் புண்ணிய நாமம்
புதுயுகக் கும்மி யடித்திடு வோம்!

விண்ணொளிர் மெய்யறி வின்பம் விளங்கிடும்
விக்ஞான ஜோதி வளநாடு
கண்ணிற் கருத்திற் கனிவிருந் தூட்டுதக்
காட்சியைப் பாடிக்கொண் டாடிடுவோம்!

எல்லையி லின்பத் திருநாடு நலம்
எல்லாங்கை கொண்டு தருநாடு!
சொல்லெல்லாம் வேதச் சுவைநாடு மாந்தர்
தொட்டது பொன்னுஞ் சுபநாடு!

இந்திரரே நர நாரண தீரர்
இயல்பினி லேபரி பூரணர்கள்
சுந்தர சக்திக் கனல்வீசுஞ் சுடர்த்
தோகையரே யெழில் † வாகையரே!

யோகத்திலே சுத்த போகத்திலே—மதி
யூகத்திலே தெய்வ தாகத்திலே,
ஏகத்திலே ஸம பாகத்திலே—யிரு
தேகத்தி லின்னுயி ரொன்றுனர்!

அன்பலை வீசி யருள் விளையாடும்
அகண்ட ஸமரஸப் பாற்கடலில்,
பொன்மயச் சின்மயத் தன்மயா னந்தர்கள்
பொங்கிப் பொலிவதைப் பாருங்கடி!

சாத்திரங் கோத்திர மாத்திரச் சண்டைகள்
சாதி மதப்பிடி வாதங்களும்,
மூத்த முழுப்பொய்கள், மூடப் பழக்கங்கள்
மூய்ந்தன கட்டுகள் ஒய்ந்தனவே!

பாழுங் கனவென வாழ்வை வெறுத்திடும்
பாசாங்கு வேஷங்க ளில்லையடி!

---

† தவமிக்கோர்.

ஆளும் பராசக்தி யாட லுலகெங்கும்
அற்புதச் சிற்பரஞ் சோலையடி!

உள்ளன்பி லீசனோ டொன்றானார்—உல
கோங்கி வளர இரண்டானார்
செல்வத் திருவருள் மன்றினிலே—யோக
சித்தப் புதல்வர் பயின்றார்கள்.

ஆடிடுவார் அர சாண்டிடு வார்கள்;
அனைவர்க்கு மேநலந் தேடிடுவார்;
பாடிடுவார் சுகங் கூடிடு வார்கள்,
பராசக்தி யேவலிற் பாய்ந்திடுவார்.

உரைகளி லுண்மை யுழைப்பினிற் றிண்மை
யுருகு மனத்தி லருட்சோதி
கறையற் றழகு விரிந்திடும் வாழ்விற்
கடவுளைக் கண்ட புதுச்சாதி!

எண்ணருஞ் செல்வத் தொழிலுடையா—ரின்ப
மெங்கிலுங் காணு மெழிலுடையார்.
விண்ணவர் சங்கம் விளங்கிடுவார்—என்றும்
வெற்றி பெறுகெனக் கொட்டிடுவோம்?



## ௯. ஆத்ம சுதந்திரம்.

* அறிவொளி நிறைந்தசுத் தாத்ம சுதந்திரர்
அடிமைப்பட் டழிவாரோ?
பொறிபுல னடக்கிய பூரணப் புலவர்கள்
பொய்வழி புகுவாரோ?

அனைத்துமோ ரிறைவனென் றடைக்கலம் புகுந்தவர்
அகந்தையி லொளிவாரோ?
மனையினிற் படுவிடப் பாம்பினை மனத்தொடும்
வளர்ப்பதற் கிசைவாரோ?

விளங்கிடும் யாவையும் சிற்பர விளக்கமாய்
விண்டதெள் ளருளாளர்
உளங்கண்ட வொன்றையே பலவிலுங் கண்டபின்
உலகினில் மருள்வாரோ?

தன்னுளே மின்னிடும் விண்ணர சாளுவோர்
சாத்திரஞ் சுமப்பாரோ?
பொன்மலை பொருந்தியோர் கன்மனத் தோரின்கை
புகுந்துண்ண நினைப்பாரோ?

ஈகையன் பின்பத்தில் இறைவனிற் கலந்தவர்
எமனையும் மதிப்பாரோ?
யோகத்திற் போகத்தை யுகந்திடு மூத்தர்கள்
மோகத்திற் குதிப்பாரோ?

அற்புதத் தவசக்தி யனலிடுந் தீரர்கள்
அச்சமொன் றெய்வாரோ?
கற்பகச் சுகத்தினைக் காஞ்சிரங் காட்டிற்குக்
கைவிலை செய்வாரோ?

"ஓம்சக்தி" மந்திரம் உள்வளர் யோகியர்
உவப்பினிற் பிரிவாரோ?
நாம்சுத்தி நாம்முக்தி நாம்சக்தி யென்றுணர்
நலத்தினைப் பெறுவாரே!

*

## எ. சக்தி வெல்க!

* சக்திவெல்க! சக்திவெல்க!
சுத்தசக்தி வெல்கவே!
சக்தி யோக சக்தி யாத்ம
சக்தி யென்றும் வெல்கவே!

ஸத்யதர்ம சித்தர் ஜீவன்
முக்தர் சங்கம் பல்கவே!
சாந்த மின்ப மங்களந்
தழைத்து வாழ்வு மல்கவே (சக்தி)

கருத்தி லோங்கு வீரசக்தி
கையி லோங்கும் ஆற்றலே!
காசினிக் கிதஞ்செய் வீரக்
காதல் வெள்ள ஆற்றுநாம்;
பாத்தினை யிகத்தினிற்
பளிச்சிடத் துலக்குவோம்!
பாரி லான்ம பூரணம்
பழுத்து வான் செழிக்கவே (சக்தி)

தரித்திரம் பொறாமை வஞ்சத்
தன்னலப் பிசாசுகள்
ஸமரஸத் தடைகள் ஈனச்
சாதிவாதப் பூசல்கள்
உரத்தவன் எளியரின்
உறுகணுகி வாழவோ?
உடைமைகள் பொதுமையற்
றொருவன் கையிற் சூழவோ? (சக்தி)

மாதரின் உரிமையை
மறுப்பதைப் பொறுக்கிலோம்!
மனிதரை மனிதர் மாய்க்கும்
போர்களை மடக்குவோம்!
நீதியுண்மை நல்லறிவு
நேர்மை செல்வம் ஒற்றுமை!
நிலத்திலங்க வேதுணிந்
துழைத்திலங்க தைரியம்!
மாதவச் சுடரினால்
மனவிருள் குலைகவே!
மண்ணும் விண்ணும் மன்றல் கூடிப்
பூரணம் வளர்கவே!
ஆதிசக்தி மைந்தர் நாம்
அருட்குலத்தி லொன்றுவோம்!
ஆலய வுலகிலே
யமரவாழ்வு வாழுவோம்! (சக்தி)

***

## அ. ஆத்ம வீரம்.

* வெற்றி வெற்றி வீரவெற்றி வெற்றி யான்ம வெற்றியே!
சுற்றி தெய்வ சக்தி ஞான ஜோதி சூழ வெற்றியே!

தொல்லை தீர தெய்வசக்தி வல்லமை யளித்தனள்
எல்லை யற்ற வுண்மைதன்னை வெல்ல யாரும் வல்லரோ ?

வெந்தழ லுமிழ்ந்து கொல்லும் விந்தை விந்தை வெஞ்சரம்
அந்த மாதி யற்ற சக்தி யாற்றலை யுறிஞ்சுமோ ?

சிற்றவெம் பகைச் செருக்கு சேனை கொண்டு தாக்கினும்
கூற்றிற்கும் பிடிப டாத கொற்றவனை மாய்க்குமோ ?

வாயுவின் றிறத்தை வீசு வாள்சி தைக்க லாகுமோ ?
தாயி னன்பு வெள்ளத்தைத் தடிதடுக்கப் போகுமோ ?

கதிரவ னொளியினைக் கடற்புய லணைக்குமோ ?
முதுதிரை விலங்கிடும் முயற்சியும் பலிக்குமோ ?

காளியன்னை மெய்ப்புகழ் களித்தெழுந்து பாடுவோம்
மாலையாய் மனமெலாம் மலரடியிற் போடுவோம் !!



## கூ. ஜெயகாளி !

பல்லவி.

* சக்தியி னிச்சை யடா—வரும்
வெற்றி யவள் பிச்சையடா (சக்தி)

அநுபல்லவி.

சுற்றிலும் பார்! அருட்சோதி யொளிர்-பரா(சக்தி)

சரணங்கள்.

நின்மலர் நெஞ்சினிலே—வீர
நெருப்பெனக் காந்திடுவாள்—அவள்
பொன்னடி சூடிடுவோம்—வேண்டும்
பொருளெல்லா மீந்திடுவாள் (சக்தி)

தோள்வலி மிகத்தருவாள்—தெய்வத்
தொண்டருக் கிதம்புரிவாள்!—அன்பர்
கீழ்மையைப் போக்கிடுவாள்—உயர்
கீர்த்தி பெருக்கிடுவாள். (சக்தி)

தடைகளை யுடைத் தெறிவாள்—பகையைத்
தழல்படக் குமைவெறியாள்!
கடல்முர சொலித்திடுவோம்—ஜெய
காளியென் றிசைத்திடுவோம்!— (சக்தி)

* * *

## க0. கண்பார்.

* கண்பார் கருணை வெள்ளக் காளீ—யுன்
காக்குந் திறமை யென்றும் வாழி—நாங்கள்

புண்பட்ட நாட்களினிப் போதும்—இன்பம்
பொங்கும் புதியவழி யோதாய்!

வறுமை மடமையிருள் வாயில்—வெறும்
வயிற்றுத் துருத்திகளாய்த் தேயும்—பொல்லாச்
சிறுமை யடிமை நரகின்னல்—தன்னைச்
சிறிப் புடைத்திடுவாய் முன்னே!

வேற்றுமைத் தற்கொலைகள் கோடி—மத
வீண்வாதச் சொற்கொலைகள் கோடி—எமக்
காற்றல் பெருகவரந் தாராய்—பாரின்
அக்கப் போர்களெல்லாந் தீராய்!

தோளை யிமயமலை யாக்காய்—அருட்
சொல்லில் வீரசக்தி யூக்காய்—வாழு
நாளுன் அருட்பணிக்கு வேள்வி—தாயே
நல்காய் அமரர்நல வாழ்வே!

தூங்கி மடிவதினி நன்றோ—வுன்
சூரச் சந்ததிக ளன்றோ—எம்மை
நீங்காத் துணைவலிமை யாவாய்—இங்கு
நேரே வானரசை யீவாய்!



## கக. எங்கும் சக்தி.

* செம்பவழ வாய்திறந்து தங்கநகை செய்தாள்
செங்கதிரைப் பரப்பிமனப் பங்கயத்தைத் திறந்தாள்.
இன்பவெள்ளம் பொங்குகின்றாள் எற்றுதிரைக் கடலாய்.
இருண்முகிலைக் கறந்துலகிற் கருண்மாரி பெய்வாள்.
அன்புருகத் தவழுகின்றாள் ஆடிவரும் நதியில்.
அமுதகலைச் சந்திரனில் அமைதியளிக் கின்றாள்.
கண்பறிக்க மின்னுகின்றாள்; கணக்கில் மணிகாந்தும்
காரிரவுப் பந்தலிலே கண்வளர்த்து கின்றாள்.
எண்ணில்லா வுலகுடையாள் எங்கள் பராசக்தி
எல்லாந்தன் னிச்சையினு லியற்றிடுவாள் சக்தி.
விண்ணெல்லாம் விரிவானாள்; வீசுகின்றாள் காற்றில்
விளங்குகின்ற காட்சியெல்லாந் துலங்குகின்றாள் சக்தி.
பண்ணெல்லாம் ஒமொலியாய்ப் பரவுகின்றாள் சக்தி
பாரெல்லாம் உயிர்க்கறிவாய்ப் பயிலுகின்றாள் சக்தி.
எண்ணியெண்ணி நலம்பெறுவோம்! இளமையிசை வீரம்
எல்லையில்லா வரந்தருவாள்—இறைவி பராசக்தி!



## கஉ. வழிபாடு.

பல்லவி.

* வழிபடுவோம்—தாயை—வழிபடுவோம்
வணங்கி "ஓம்சக்தி, ஓம்சக்தி ஓம்" என்றுநாம்—(வழி)

அநுபல்லவி.

அழகெனுங் கோயிலில் அறிவொளி துலக்கிமெய்
யன்பு மலர்தூவி யர்ப்பணித் தாவியை (வழி)

சரணங்கள்.

பந்தனை சிந்திடச் சிந்தனை செயல்களைப்
பயனுட னளித்தவள் பக்தியிற் களித்தே
அந்தமில்லா சச்சி தானந்தம் பொங்கிட
அத்யாத்ம திரத்தில் அமரவாழ் வோங்கிட (வழி)

வாய்மையுந் தூய்மையும், வளமையு மிளமையும்,
வளர்தவ யோகமும் அளவறு போகமும்,
வாய்த்திட வான்கனி காய்த்திட வையத்தில்
மங்கள சக்தியை எங்கிலு மெவற்றிலும் (வழி)



## கரு. புதுயுகம்.

* புதுயுகம் வேண்டும்—புதுயுகம் வேண்டும்!
பூரணம் பொலிந்திடப் பொதுநடத் தரசே! (புது)

கதிமதி நீயென்றுன்—காவலில் வளர்தவப்
புதல்வருன் னிசைகண்டு—பொங்கி மகிழ்ந்திட (புது)

யோகமே வாழ்வெனும் மோகன முரளியுன்
கோகுல வுலகினைக் கொஞ்சி விளையாடப் (புது)

நாடுகள் கடுஞ்சமர்க் காடுக ளின்றியே
கூடவுன் னானந்தக் குவலய லீலையில் (புது)

எனதுன தெனும்பெரும் இடர்க்கடல் கடந்தெல்லாம்
உனதருட் பொதுவினில் ஒன்றுபட் டோங்கிட (புது)

சோற்றுடைக் கவலையும்—சோம்பற் சுகமுமின்றி
ஆற்றலுஞ் செல்வமுன் ஆணையி லுய்திட (புது)

புல்லியல் வேற்றுமை—புறவுடை நடைதரும்
எல்லையில் லாமதத்—தொல்லைகள் ஒழிந்திட (புது)

சுத்த ஸமரஸ சுதந்திர வெளியினில்
அத்யாத்ம சித்திபெற் றமரராய் வாழ்ந்திட (புது)

சாவினை வென்றுயிர் சச்சிதா னந்தத்தில்
மேவிட வுலகெலாந் தேவசங்கம் விளங்க (புது)



## கச. ஆர்வம்.

வீரத் தவக்கனலை யூட்டி—யோக
வெற்றித் திருவிழியை நாட்டி—யருள்
பூரித்த புன்னகையைச் சூட்டி—நலம்
பொங்கும் புனித வழி காட்டாய்!

கல்லும் இரும்புங் கசிந் துருக—அம்மா
கண்ணுங் கம்பலையும் பெருக—என்
உள்ளக் கிளி வருந்திக் கூவி—மிக
வுட்கிக் குலைந்ததடி யாவி.

பாதப் போதினிலே தஞ்சம்—எனைப்
பாராய் திருவிழியாற் கொஞ்சம்—பிற
கேதே பெருமகிழ்வின் பஞ்சம்—உன்
னிச்சைக் குரிமையிந்த நெஞ்சம்.

வெற்றுப் புல்லாங்குழலென் மேனி—யதில்
வேணுகானஞ் செய்வது நீ நீ—செழுங்
கற்று வுயிர்களுக்கு நீயே—யென்னைக்
கண்பார் கருணைவெள்ளத் தாயே.

ஓங்காரந் தழைக்குமன வீணை—தனி
லுண்மைச் சுவையணியைப் பேணி

ஜங்காரஞ் செழிக்க வழு திவாய்—உன்
சக்திப் பெருக்கையொரு—பாவாய்.

காலைச் சாந்த மனந் தருவாய்—தென்றற்
காற்றின் சுயேச்சையென வருவாய்—வேனிற்
சோலைச் சுகவளமை போலே—தெய்வ
ஜோதிக் கருணைமுகத் தாலே,

இன்புற் றுன்மகனைப் பாராய்—வாவென்
றேற்றுத் திருக்கரத்திற் சேராய்—ஞான
சம்பந்த னுக்களித்த பாலைத்—தந்து
தாகக் கனலைமுற்றுந் தீராய்!

மானி டத்தை யுரு மாற்றி—மன
மாசைத் துடைத்தழகை யூற்றி—யின்ப
வானத் திரு வரசை நாட்டி—யிந்த
வையத் தமரர் குலம் போற்றுய்.

வானக் கருமுகிலைப் போலே—யென்
வாழ்வை யமுதமழை யாலே—விஞ்
ஞானம் பெருக நிறை வாக்கி—யுன்
ஞாலச் சுகப்பணியி லாக்காய்!

அச்சத் திமிரமினி யேதுன்—பே
ரன்புத் துணிவிருக்கும் போது—சிறு

கொச்சைத் துயரமினி யுண்டோ?—கொடுங்
கூற்றும் நடுநடுங்கக் கண்டோம்!

ஜயலக்ஷ்மீ பாரதி கல்யாணி—ஓம்
சக்தி சுத்த சிவ கௌரி!
ஜயகாளி சங்கரி பவானி!—ஓங்
காரி சரணம் பரதேவி!



## கரு. சக்திக் கனல்.

* கனல் வளர்த்திடுவோம்-சக்திக்-கனல்வளர்த்திடுவோம்
காரியத்தில்-வெற்றி-வீரக் கொழுந்தேறக் (கனல்)
வினை விளைவுகளில்-இன்பக்-கனிவிளக்கிடுவாள்!
விண்ணெட்டி-வெண்சுடர்-வீறுற் றெழுந்தோங்கக்(க)
உதய கன்னிகையே-யன்பர்-இதய குண்டத்திலே
உண்மை யிரவி யொளிபெறத் தூண்டினள் (கனல்)
நிதிக்குவை நிறைக-வாழ்வு-புகழ்வளம் பொலிக!
நித்திய சுத்த சுதந்திர மோங்கிடக் (கனல்)
அச்சமில் லாமனமும்-இந்த்ர-வஜ்ஜிரம் போலுடலும்,
ஆனந்த வூற்றுநல் லாற்றல் புரண்டோடக் (கனல்)

" அச்சோ "வென்றே யலறிப்—பாழுங்—கொச்சை யிருட்
[கணங்கள்
ஆணவக் காட்டிழிந் தோடி மடிந்திடக் (கனல்)

காளி பவானி சண்டி—தீயிற்—கால்வீசி யாடுகின்றாள்
காதக வூணரோர் கைப்பிடி நீறுனர் (கனல்)

வேள்வி புரிந்திடுவோம்-விஞ்ஞான-வேள்வி புரிந்திடுவோம்
விண்ணரசிங்கு விளங்கிநலம்பெற (வேள்வி)

அவிசொரிந் திடுவோம்—தெள்—ளமுதமுண்டிடுவோம்
ஆகண்டலனோ—டமரர்—புடைசூழக் (கனல்)

புவி செழித்திடவே—யோக—பூரண முற்றிடவே
புதுயுகக் காதலர் பொங்கி மகிழ்ந்திடக் (கனல்)



## கசா. அடைக்கலம்.

* வாழிய சத்திய ஜோதி யிறைவி
மஹாசக்தி யம்பிகையே—தெய்வ
வாழ்க்கையின் வேள்வியுண் டாக்கும் பயன்கள்
வழங்கினோ முன்பதமே

ஆழியி லாறு கலப்பது போலுன
தன்பினிலே கரைந்தோம்—இனி
யூழி யெதிர்த்திடர் சூழினுங் கேடிலோம்
உன்னைச் சரண் புகுந்தோம்!

அள்ளமு தூற்றெம துள்வளர் உன்னருள்
ஆனந்தக் கற்பகமே—இன்பந்
துள்ளித் துளிர்த்தெழு வெள்ளத்தி லேசிறு
துன்பங்கள் புற்புதமே

சள்ளை விளக்கு மகந்தை யரக்கர்
தடித்த கொடுமைகளைச்—சிறு
பிள்ளை விளையாட்டாய்க் கிள்ளிடு வாயுன்
பெருமைக் கடைக்கலமே.



## கஎ. நான்கு சக்திகள்.

* ஜோதி ஞானச் சுடர்விழி பார்த்தெம்மைப் போற்று
[வாய்—
அறி வேற்றுவாய்—துயர்—மாற்றுவாய்—எங்கும்

ஆதி சக்தி மஹேஸ்வரி யுன்முகந்
        தோற்றுவாய்—கடைத்—தேற்றுவாய்!

தீதகந்தை யிருட்கண மோர்கணம் ஓட்டுவாய்
        கனல்—காட்டுவாய்—இடர்—வாட்டுவாய்—காளி
பூதலத்தி லுன் னிச்சைக் கெம்மை விளை
        யாட்டுவாய்—வெற்றி—நாட்டுவாய்.

பாரெலாம் பசுஞ் செல்வத் திருநகை பாலிப்பாய்
        அமு—தாலிப்பாய்—அணி—சேர்விப்பாய்—வாழ்வைப்
பேரின்பக்கவி யாக்கி மஹாலக்ஷ்மி—
        பாரிப்பாய்—உளம்—பூரிப்பாய்.

பூரணம் பரிபூரண சித்தியுண் டாக்குவாய்—
        அரு—ளூக்குவாய்—குறை—நீக்குவாய்—தெய்வ
காரியத்தைக் கலைமகளேநிறை
        வேற்றுவாய்—காப்—பாற்றுவாய்.



## க௮. முறையீடு.

* என்றுன்றன் சித்த மிளகிடு மெங்கள்பால் சக்தியன்னை
என்றெம் விலங்குக ளிற்று விழுந்திடும்— சக்தியன்னை

அரக்க மாய வகந்தை யழியுமோ—சக்தியன்னே
பொறுக்கி லோம்புகுந் தோமுன் சரணமே—சக்தியன்னே

புதுப்புதுக் கொலை வெம்பொறி யெங்களே—சக்தியன்னே
கதமுடன் கனல் கக்கி மடிக்குதே—சக்தியன்னே.

வறுமை யச்ச மடமைகள் கொஞ்சமோ—சக்தியன்னே
குறைக ளெத்தனை கோடி புகுந்தன—சக்தியன்னே!

எங்க ளுய்விற் கொருவழி யில்லையோ—சக்தியன்னே
செங்கண் ணிறையுன் சேவடி வாக்கிறோம்—சக்தியன்னே!

வாள்க டந்தோர் வல்லமை நீயன்றோ—சக்தியன்னே!
ஆளு நாயகி யாவர்க்கும் நீயன்றோ—சக்தியன்னே!

யாவ ருன்னரு ளாணையை மீறுவார்—சக்தியன்னே.
தேவர் சேனை செலுத்திட வல்லனே—சக்தியன்னே!

வாவென் றுலிந்த வைபக முன்கையில்—சக்தியன்னே
காவ லாருமெங் கண்மணித் தெய்வமே—சக்தியன்னே!

உன்னை யெண்ணி யுயிர்வைத் திருக்கின்றோம்—சக்தியன்னே
உன்னடி விட்டினி யோரடி வைத்திலோம்—சக்தியன்னே.



## ௧௯. அருமைத்தாயே!

புத்திளம் புன்னகை வெள்ளமே—புதுப்
பொற்சுட ரேற்றியெம் முள்ளமே—ஆத்ம
சத்திப் பெருக்கினி லாட்டுவாய்—மனச்
சஞ்சலப் பேய்களை யோட்டுவாய்
எற்றி யிடர்களைத் தள்ளுவாய்—முன்
னேற்றமு மாற்றலு நல்குவாய்—தேவி
வெற்று வனாந்திர மண்ணிலும்—பசும்
விண்ணக மாக்குவை யெண்ணிடின்.

அன்பைத் தவக்கன லாற்றுவாய்—
அமரரா யெங்களை மாற்றுவாய்—உண்மை
யின்பச் சிகரத்தி லேற்றியே—உன்னி
லிவ்வுல கொற்றுமை கூட்டுவாய்
பொங்கறி வாயுளு நீடுற—எங்கள்
பூதவுடலணிந் தாடுவாய்—அம்மா
எங்க ளருமைத்தா யென்றுனைக்—கேட்டோம்
எல்லா நலங்களு மாற்றுவாய்.



## ௨0. சக்தி ஓம் சக்தி!

ஆருடல் யாவுமுன் போர்வைக ளன்றோ
அழிவறு வலிவருள் சக்தி ஓம்சக்தி!
ஆருயிர் யாதுமுன் னன்புயி ரன்றோ
அமர நிலைதந்தருள் சக்தி ஓம்சக்தி!
பாரகம் நீவிளை யாடக மன்றோ
பரவுன தழகணி— சக்தி ஓம்சக்தி!
பூரண யோக மஹேஸ்வரி நீயே
பூர்ண சித்தி யருள்— சக்தி ஓம்சக்தி!
பேரின்ப ஞானப் பெருங்கடல் நீயே
பிரிவறு மறி வருள்— சக்தி ஓம்சக்தி!
வீரரின் வீரமும் வெற்றியும் நீயே
வென்றிடு வீறருள்— சக்தி ஓம்சக்தி!
அனைத்தையும் அளித்திடும் ஆதியும் நீயே
அன்னைபோ லாதரி— சக்தி ஓம்சக்தி!
மனத்திலும் வாக்கிலும் நோக்கிலு நீயே
மருவறு மெய்யருள்— சத்தி ஓம்சக்தி.
காலமுங் கோலமுங் கடந்ததோர் நிலையே!
கலங்கறு நிலையருள்— சக்தி ஓம்சக்தி

சாலநற் கலைகளு மறைகளு நீயே!
சாகாக் கலையருள் சக்தி ஓம்சக்தி!
மந்திரந் தந்திரம் மருந்தெலாம் நீயே
மனப்பிணி தணித்தருள்— சக்தி ஓம்சக்தி!
சுந்தரி சுத்த சுதந்தரி நீயே
சுடர்மணி வாழ்வருள்— சக்தி ஓம்சக்தி!

***

## ௨௨. வீரர் எழுச்சி.

* வீரக் கனல் பெறுவீர்—செயல்
வெற்றியு மொற்றுமையும்
பாருக்கெல் லாமிறைவி
பராசக்தி தந்திடுவாள்

யாருக்கு மேகுடி யல்லோம்—சக்தி
யன்னையி னாட்சியி லுள்ளோம்—இந்தத்
தாரணி யேயெதிர்த் தாலும்—ஆத்ம
சக்தி யிருக்குது வெல்வோம் (வீர)

சத்திய மொன்றதை மறப்பார்—பேதச்
சண்டையிட் டிட்டுயிர் துறப்பார்—இனி

எத்தனை நாளிதைப் பொறுப்போம்—இந்த
இன்ன லடிமையைத் தொலைப்போம் (வீர)

ஜாதி மதப்பிடி வாதம்—தூய
தன்மை யறியாத சேதம்—தெய்வ
நீதியில் லாததற் போதம்—செய்த
நீசப் படுதுயர் போதும் (வீர)

வேற்றுமைப் பிடைக ளழிக—புற
வேடஞ்செய் மாயங்க ளொழிக—அறி
வாற்றலும் ஆண்மையும் வளர்க!—சச்சி
தானந்தம் வாழ்வினி லொளிர்க! (வீர)



## ௨௯. தொண்டர் பாட்டு.

* தொண்டுசெய்வோம்—அன்பு—கொண்டுசெய்வோம்—
தொல்லுலகின் அல்லலெல்லாந்—தொலைந்து வளம்பெருக (தொ)

ஒன்றின் விரிவை யெங்குங் கண்டிடுவோம்—ஆன்ம
வொற்றுமையில் வெற்றியுட னூன்றிடுவோம்.

எண்டிசையும் "ஸமதர்மம்" என்னும் முரசை—மாந்தர்
எல்லோரும் ஓர்குலமென் றடித்திடுவோம் (தொ)

பாரெல்லாங் கோயிலெனப் பரவிடுவோம்—அருட்
பணிகளை யோகமெனப் பயின்றிடுவோம்.
ஊரெல்லாம் சிற்றுலக மாக்கிடுவோம்—ஒவ்வோ
ருயிரிலும் உலகுயிர் ஊக்கிடுவோம் (தொ)

உணவுடை பெருகிட வுழைத்திடுவோம்—எங்கும்
உண்மையறி வொளிபெற விளக்கிடுவோம்!
பணத்தை பகவதிக்கே வென்றிடுவோம்—கோடிப்
பலன்பெறுந் தொழில்களைப் பயின்றிடுவோம் (தொ)

அனைவரும் ஆண்டவனில் அணைந்திருப்போம்—சச்சி
தானந்தப் பயிரென வுயிர் வளர்ப்போம்
மனிதர்க்குந் தேவருக்கும் மன்றல் முடிப்போம்—பூவில்
வானரசு வந்ததென்று மங்களஞ் சொல்வோம்.(தொ)



## ௨௪. நன்மை வெல்க! தீமை செல்க!

* தெய்வசக்தி யிச்சையே— வெல், வெல், வெல்!
தீதகந்தை யச்சமே— செல், செல், செல்!

வைய முய்யும் யோகமே— வெல், வெல், வெல்!
மதிமயக்கு மோகமே— செல், செல், செல்!
மெய்யறி வோடின்பமே— வெல், வெல், வெல்!
வேறுசெய்யுந் துன்பமே— செல், செல், செல்!
பொய்யிலாத சுத்தமே— வெல். வெல், வெல்!
புல்லடிமைப் பித்தமே— செல், செல், செல்!
வார்த்தையாடும் வாதமே செல், செல், செல்!
வாழ வைக்கும் வேதமே— வெல், வெல், வெல்!
பாழ்த்த மூத்த குற்றமே— செல், செல், செல்!
பந்தமற்ற வொற்றுமை— வெல், வெல், வெல்!
நாத்திகப் பிசாசமே— செல், செல், செல்!
நம்பு மன்பு நேசமே— வெல், வெல், வெல்!
அத்திரக் கொடூரமே— செல், செல், செல்!
ஆத்மசக்தி வீரமே— வெல், வெல், வெல்!



## ௨௫. பூரணனந்தம்.

* பூரணு னந்த வமுதம் பொழிகுது
புசிக்க வாரீரே—உள்ளம்
பசித்து வாரீரே!

பாரகத்தில்—அன்புப்—போகத்தில்—ஞானத்
தாரகத்தில்—அரு—ளூறகத்தில்
காரணங் கற்பனை யாவுங் கடந்து
கருதக் கருதக் களிக்கும் களிப்பினிற் (பூரண)

பக்தியிலே—நெஞ்ச—மத்தியிலே—த்யான
சக்தியிலே—ஆத்ம—சக்தியிலே
சித்தியிலே—ஜீவன்—முக்தியிலே—யோக
தத்துவ—மாகிய—நித்திய—வாழ்வினில் (பூரண)

பாசமற்றே—மனப்—பூசலற்றே—சித்தம்
ஊசலற்றே—தீய—வாசமற்றே
வேஷமற்றே—து—வேஷமற்றே—யிருள்
மோசமற்றே—யக—நாசமுற்றவிடம் (பூரண)

உண்மையுடன்—அச்ச—மின்மையுடன்—தீரத்
திண்மையுடன்—பொதுக்—கண்மையுடன்
பன்மை யெல்லா மொரு—சின்மயமே—யது
தன்மய மென்றுணர் சச்சிதா னந்தத்தில் (பூரண)



## உகூ. வினவிடை.

* சஞ்சலந் தீரவோர் சஞ்ஜீவி சொல்லடி ?—
  சத்திய ஞானப் பெண்ணே-ஜீவன்-முத்தரின் ஜோதிக்
  [கண்ணே !
அஞ்ச லருள்பர மாத்மனை முற்றிலுந்—
  தஞ்சம் புகுந்திடுவாய்-மனிதா-அஞ்சுதலற்றிடுவாய் !
தத்துவ வித்தையின் சத்தினைச் சாற்றுவாய் ?—
  தன்னைத்தான் கண்டிடலே-எல்லாந்-தானெனக்கொண்
  [டிடலே
இத்தல வாழ்க்கையின் உட்கருத் தென்ன சொல் ?
  எல்லையில் இன்பத்திலே-எங்கும்-ஈசனைக் கூடிடலே !
இன்ப வுலகினில் இன்னல் புகுந்ததேன் ?
  ஈன வகந்தையினல்-மனிதா-ஆணவஞ்செற்றிடுவாய் !
அன்பரு ளொற்றுமை வெற்றியுண் டாகுமோ ?
  ஆன்ம வுறவினிலே-யோக-மாகிய வாழ்வினிலே !



## உஎ. அன்பு.

* அன்பைப் பெருக்கிடுவோம்—கிளியே
  யன்பு கடவுளடி—

அன்பமு துண்ணுதற்கே—யுயிரின்
ஆசை வளர்த்திடுவோம்!
நண்புகொண் டுள்ளமெல்லாம்—ஈசனுக்கு
நாண்மலர் மாலைசெய்வோம்
இன்பமெல் லாம்பெருகும்—கிளியே
இன்னலெல் லாமொழியும்!
அன்பின் விரிவினிலே—மாந்தர்நட
மாடிடுங் கோயிலடி
திண்புள்ள வொற்றுமையும்—கிளியே
தெய்வ சுதந்திரமும்
பண்புறு காதல் வெற்றி—கிளியே
பல்கிச் சுகம் விளைக்கும்
அன்பு வெள்ளந் தழைக்க—விண்ணர
சாட்சி யிங்கே செழிக்கும்!



## உஅ. அஞ்சுதலேன்?

பல்லவி.

* அஞ்சுத லேனோ—மனமே?
—யாம் சச்சிதானந்தத் தீம்பொரு ளென்றபின் (அஞ்)

### அநுபல்லவி.

வஞ்சக் கொடுந்துயர்கள்—வளைத்தலை மோதினும்
வாழ்வெல்லாம் பரப்ரம்ம—வேள்வியென் றுணர்ந்தபின் (அ)

### சரணம்.

ஆத்மா வொன்றுண் டுண்மை—யறிவதன் றன்மையாம்
ஆலய வுலகதன்—ஆனந்தப் பன்மையாம்
தோற்ற மதன் விளை—யாட்டுடை விரிவே
சுகதுக்க தொந்தங்கள்—அகந்தையின் பந்தங்கள்
சுடர்காந்தும்—உன—திடமுள்ளம்—அங்கு
திடமாவாய்—பிற—கிடரேதே ?—பொல்லா
எமன் பாசம் வீசினும் நமக்கொரு மாசில்லை (அஞ்)



## உகூ. இன்ப வழி.

விடடா-அச்சம்-விடடா-மோகம்
விடடா-சினம்-விடடா-நெஞ்சே
வீரசக்திசக்தி சக்தியென்றே மூச்சு
விடடா-தீரப்-படடா !

சுடடா பொய்யைச் சுடடா-பேதஞ்
சுடடா-பற்றைச்-சுடடா-தெய்வ
சுத்த சுதந்திர நித்திய வாழ்வினைத்
தொடடா-அன்பை-நடடா!

கள்ள மயக்குன்னைக் கொள்ளைகொள் ளாதுகண்
விழிடா-ஞானஞ்-செழிடா!-ஜோதி
தெள்ளத் தெரிகுதொன் றுள்ளத்தி லேகண்டு
தெளிடா-தன்னைத்-தெளிடா!

ஆணவ மாயையை-யாணிவேருடன்
அறுடா-யோகம்-பெறுடா-முற்றும்
ஊணுக்கி யுன்னை யகண்டாத்ம வுண்மையில்
உறைவாய்-இன்பம்-நிறைவாய்!



## ௩௦. தோழரே!

கண்ணிலங் தன்னிலவ் விண்ணமு துண்ணலாம்-தோழரே
கைக்கனி யாகிடுங் கற்பகப் பொற்கனி- தோழரே!

எண்ணித் துணிந்திட ரெற்றிமுன் னேறுவோம் தோழரே!
எத்தனை பேய்கள் புகுந்தன வீட்டிலே- தோழரே!

இன்ன லகந்தை யிருட்சிறைக் கட்டினில்- தோழரே!
எச்சுற்று மூச்சுப் பிணம்போ லிருப்பதோ-தோழரே!
தன்னறி வாகிய சக்தியைத் தூண்டுவோம்- தோழரே!
தாரணி வாழ்வைத் தவக்கன லாக்குவோம்-தோழரே!
வேள்வி யாக வினைகள் புரிகுவோம்- தோழரே!
வேற்றுமைகளை வெட்டி யெறிகுவோம்- தோழரே!
வாழ்வை யான்மப் பயிர்வள மாக்குவோம்- தோழரே!
வளவளத்த வழக்கங்கள் போக்குவோம்- தோழரே!
மென்மைப் பெண்மை மெலிதுயர் நீக்குவோம் தோழரே!
வீட்டு சக்தியை வீரசுதந்தரி யாக்குவோம்!
நம்மை நம்மதைத் தெய்வப் பொதுமைக்கு நல்குவோம்!
ஞால நன்மை தழைக்கத் தவஞ்செய்வோம்-தோழரே!



## ௩௧. புதுயுகக் குயில்.

* இன்பக் கனல் பிறக்க,
எங்கள் மன முருக்கி,
யன்புக் குரலெடுத்தே—குயிலே
யானந்த மாய்ப் பாடுவாய்!

தக்கத் தகெனத் திசை
தாளந் தெறித் தொலிக்கக்
† "குக்கோஓ" வெனக் கூவுவாய்—குயிலே
கோயி லுலகமெல்லாம்

மேனிக் கருமை யில்லை
வேடச் சிறுமை யில்லை;
போன விடங்க ளெல்லாம்—குயிலே
பொன்னும் பசுமையடி.

காதற் கனி ரஸத்தாற்
காட்சி யழகி லுன்றன்
நாதச் சித்திர நயம்—குயிலே
நல்விருந் தாகுதடி

அஞ்சாச் சுதந்தி ரத்தில்
அகண்ட ஸமா ஸத்திற்
கொஞ்சி விளையாடு வோம்—குயிலே
கூடிக் களித்திடுவோம்!

---

† கு உலகம்; கோ=தேவலோகம்=உலகில் விண்ணுலகின்பம் வந்துவிட்டது.

மேகத்தை முத்த மிடும்
மின்னின் ஒயில் நடைக்கோர்
மோகனப் பண் ணிசைப்பாய்—குயிலே
மூட்டிப் பரவசமே!

ஆசை யிருட் டடிமை
ஆணவப் பொய் யடிமை
வேசை மனத் தடிமை—யுலகில்
வேண்டாமென் றோதடியோ!

வெஞ்சுரக் கோடை யினும்
வேகும் பொறாமை வளர்
வஞ்சகர் வெட்கிடவே—குயிலே
வானெட்டக் கூவிடுவாய்!

தன்னலக் கூண்டினிலே
தங்க விலங்கினிலே,
என்ன வுறக்க மென்றே—குயிலே
எழுப்பிடு வாயுலகை!

காமக் குரோதத்திற்
கண்கெட் டலையாதிர்

சேம வழி யிதென்றே—குயிலே
　　தீரக் கூரலெடுப்பாய்!

வெற்றுரை பேசாதீர்
　　விக்ஞான யோகத்தில்
ஒற்றுமை வெற்றியென்றே—குயிலே
　　யுபக்க முழக்கிடுவாய்!

வகுப்புப் புகைச்ச வற்ற
　　வாச வசந்த மகிழ்
சுகக்கனிச் சோலையிலே—குயிலே
　　சொகுசாய்த் திரிந்திடுவோம்!

எட்டி லெழுதாமல்
　　எனதுன தென்னுதுன்
பாட்டினுக் கண்டமெல்லாம்—குயிலே
　　படம்விரித் தாடுதடி!

ஆயிரந் தெய்வ மின்றி
　　யறிவுத் தெய்வத்தோ டொன்றி
வாய்மை விளக்கிடுவோம்—குயிலே
　　வானின்பங் கூடிடுவோம்!

எல்லாரும் என்னவர்கள்
எல்லாருந் தன்மயர்கள்
எல்லாரு மன்ன ரென்பாய்—குயிலே
இன்சொற் களஞ்சியமே.



## ௩௨. ஆனந்த நடனம்.

பல்லவி.

* ஆனந்த நடன மாடினுள்—சச்சி
தானந்த நடன மாடினுள்—அரவிந்த சக்தி (ஆன)

அநுபல்லவி.

தானேதா ஞகிய ஞான வெளியினில்
சர்வம் ப்ரஹ்மமெனுந் தத்வங் கலீரென (ஆன)

சரணங்கள்.

மந்திர மதுர வீணை "தும் தும்" என
மத்தளந் "தொந்தொ" மென,
சுந்தர மாய்நர நாரணர்கள் சுப
மங்கள வாழ்த்தொலிக்க,
சுத்த சுதந்தரி—வெற்றி முழக்கிட—

தோம்தரிகெட—தீம்பெருகிட
தாகிட தகதீ மென்ன (ஆன)

பெண் ணடிமையை மிதித்து—பேதப்
பேயை மண்டையி லடித்து—வேத
வுண்மைக் கொடியைப் பிடித்து—ஞாலம்
உள்ளங் குளிர நடித்து,
நன்மை மலரும் புதுமை யிலக—
தக்கத் தகதக தோங்கெட
திமிதிமிதிமி திமி தத்தென (ஆன)

சக்தியமு தாத்ம சித்தி பெருகிடத்
தாங்கினள் பூங்கரத்தில்—ஜீவன்
முத்திக் களிப்பினை பக்தர்க் கருளுவாள்
மோகனப் புன்சிரிப்பால் ;
எத்திசை யும்பரி பூர்ண மிலங்கிட
ஸத்ய யுகச்சங்கு—தத்வமஸியென (ஆன)

முத்துமுத் தாய்யோக—சித்தக் குழந்தைகள்
மூவுல கும்புரக்க—என்றும்
இத்தல வாழ்வி லகண்ட விக்ஞானத்தால்
இன்பக் கனிபழுக்க ;

எல்லாரும் என்னவர்கள்
எல்லாருந் தன்மயர்கள்
எல்லாரு மன்ன ரென்பாய்—குயிலே
இன்சொற் களஞ்சியமே.



## ருஉ. ஆனந்த நடனம்.

பல்லவி.

* ஆனந்த நடன மாடினாள்—சச்சி
தானந்த நடன மாடினாள்—அரவிந்த சக்தி (ஆன)

அநுபல்லவி.

தானேதா னாகிய ஞான வெளியினில்
சர்வம் ப்ரஹ்மமெனுந் தத்வங் கலீரென (ஆன)

சரணங்கள்.

மந்திர மதுர வீணை "தும் தும்" என
மத்தளந் "தொந்தொ" மென,
சுந்தர மாய்ஈர நாரணர்கள் சுப
மங்கள வாழ்த்தொலிக்க,
சுத்த சுதந்தரி—வெற்றி முழக்கிட—

தோம்தரிகெட—தீம்பெருகிட
　　தாகிட தகதீ மென்ன　　　　(ஆன)

பெண் ணடிமையை மிதித்து—பேதப்
　　பேயை மண்டையி லடித்து—வேத
வுண்மைக் கொடியைப் பிடித்து—ஞாலம்
　　உள்ளங் குளிர நடித்து,
நன்மை மலரும் புதுமை யிலக—
　　தக்கத் தகதக தோங்கெட
　　　திமிதிமிதிமி திமி தத்தென　　　　(ஆன)

சக்தியமு தாத்ம சித்தி பெருகிடத்
　　தாங்கினள் ஹூங்காரத்தில்—ஜீவன்
முத்திக் களிப்பினை பக்தர்க் கருளுவாள்
　　மோகனப் புன்சிரிப்பால் ;
எத்திசை யும்பரி பூர்ண மிலங்கிட
　　ஸத்ய யுகச்சங்கு—தத்வமஸியென　　　　(ஆன)

முத்துமுத் தாய்யோக—சித்தக் குழந்தைகள்
　　மூவுல கும்புரக்க—என்றும்
இத்தல வாழ்வி லகண்ட விக்ஞானத்தால்
　　இன்பக் கனிபழுக்க ;

சுத்தவே தாந்த ரஸலீலே யோங்கிடத்
　　துங்கத் தங்க யுகத்தவர்
　　　　பொங்கிச் செயசெயசெயவென　　　　(ஆன)

## ௫௫. ஆனந்தக் கூத்து.

* ஆனந்தக் கூத்திடுவோம்—சக்தி
　　யன்னையை வாழ்த்திடுவோம்!
ஏனமக் குக்கவலே—உல
　　கின்றவளே நம்மை யீன்ற பராசக்தி　　　　(ஆன)

நெஞ்சத் தரியணையில்—வளர்
　　நித்தியப் பண்ணிசைத்தே
கொஞ்சியென் னேச்சிரத்தில்—இன்பங்
　　கொட்டிக்கொட்டிக் குலாவிக்கொழித்தனள்(ஆன)

பிள்ளே யென வளர்த்தாள்—மனப்
　　பேதமைக் கட்டொழித்தாள்
அள்ளிமுத் திட்டணைத் தாள்—பர
　　மானந்தப் பாற்கட லாட்டியன் பூட்டினள்　　(ஆன)

அஞ்சலென் றேயுரைப்பாள்—சுத்
 தாத்ம பலம் சுரப்பாள்
தஞ்சமென் றன்புசெய்வோம்—சச்சி
 தானந்தத் தொட்டிலி லிட்டுத் தாலாட்டுவாள்(ஆன)
ஆகாயப் பால் வெளியில்—அகண்
 டாத்ம வறிவொளியில்
ஏக மனேக மதாய்—அவள்
 இன்னுயி ரெங்கிலுந் தன்னுயிர் வைத்தனள் (ஆன)



## ௩௪. அன்னை!

அன்னை யன்னையெனக் கூவுவோம்—அவள்
 அன்பைப் பிடித்துவிண்ணிற் றாவுவோம்!
சின்னக் குழந்தையெனக் கொஞ்சுவோம்—அவள்
 செல்வத் திருமடியிற் றுஞ்சுவோம்!

இன்பம் இன்பமெனப் பாடுவோம்—உல
 கின்னற் குலத்தை முற்றுஞ் சாடுவோம்!
தின்புக் கனல்பிறக்கக் கூடுவோம்—ஆத்ம
 தீரம் பெருகவினை யாடுவோம்!



## ௩௫. ஆசீர்வாதம்.

பல்லவி.

* ஆசீர் வாதமே போதும்—அம்மையப் பாவுன் (ஆசீர்)

அநுபல்லவி.

தேசுலா வுந்தெய்வச் செந்தா மரைக்கையாற்
சேயேனைத் தாயெனச்-சீராட்டுந் தெய்வமே (ஆசீர்)

சரணம்.

சித்த சலனங்களை யொழிக்கும்—ஜக
ஜீவ பர வுண்மையை யிலக்கும்—ஞான
முத்து முறுவலொளி யளிக்கும்—மன
மோகத்தை வேருடன் எரிக்கும்—வேத
வுத்தம ரஹஸ்யத்தை விளக்கும்—உள்ளே
ஓங்கார மண்டபந் துலக்கும்—ஜீவன்
முத்தி யமுதுவாழ்வில் இனிக்கும்—உச்சி
முகர்ந்துவிக் ஞானங்கொஞ்சிக் கொழிக்கும்—வழு
தத்துவ வாசலுந் திறக்கும்—சிவத்
தாண்டவ மிதயத்தில் நடக்கும்—நித்ய

